REG. NO. M.—940.

உ
சிவமயம்.
வேலுமயிலுந்துணை.

# வைசியமித்திரன்

# THE VYSIA MITRAN.

பிரதி சோமவாரமும் பிரசுரிக்கப்பெறும்.

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு."—திருக்குறள்.

புத்தகம் 1] தேவகோட்டை விரோதிகிருது௵ பங்குனிமீ 20உ (1--4--1912) [இலக்கம் 38.

## நகரத்தாருக்கு நல்லசமயம்

### அஜீர்ணமும் பசியின்மையுமே

அபாயகரமான அகில ரோகங்களை யும் உண்டுபண்ணும். ஆகையால் அஜீர ணத்தாலும் பசியின்மையாலும் வருந்து பவர்.

### க்ஷாரா

என்கிற உப்பை அனுப்பச்சொல்லி உடனே ஒரு கடிதம் எழுதுங்கள். அஜீர்ணத் தையும், பசியின்மையையும் போக்கி ஆகா ரத்தில் நல்ல விருப்பத்தை உண்டுபண்ண இதுதான் சிறந்த மருந்து. க்ஷாரா என்கிற இந்தஉப்பு எக்காரணத்தினுலாவது உண்டான வயிற்றுவலி, மலச்சிக்கல், வயிற்றுப்பசம், அன்னத்துவேஷம், அஜீர்ணபேதி, குன்மம், ஜ்வரக்கட்டி, லிவர் என்னும் கல்லீரலைப்பற் றிய ரோகங்கள், காமாலை, மேல்வாயு இவைகளை யும் போக்கும். க்ஷாரா விஷநுண மற்ற மூலி கைகளால் தயார் செய்யப்பட்டது. இதனால் நூற்றுக்கணக்கான ஜனம் சுகமடைந்தனர். டின் 1-க்கு ரூ 1.

பண்டித எம். துரைசாமிஐயங்கார்,
ஏ. கே. ஏ. ஸி. ஆயுர்வேதபூஷண
டாக்டர் S. K. P. D. ஆஸ்பிடல்,
ப்ரொபஸர் S. K. P. A. மெடிகல்காலேஜ்
331. தங்கசாலைத்தெரு,
மதராஸ்.

---

## இழந்துபோன பலத்தை

ஒரு குளிகை சாப்பிட்ட 6 மணி நேரத்தில் கொடுக்கும் !!

### மகா வீரிய, தங்க மாத்திரை.

ஆச்சரியமான குணம் !

மிக இன்பமான சுகம்!!

தாதுப்புஷ்டியை உண்டாக்குவதில் இது எதற்கும் நிகரற்றது! எந்த மருந்தும் இதற்கு இணையல்ல! ஒரேகுளிகையில்பரீக்ஷை பார்க்கலாம். தாது கட்டும், நரம்பு களுக்குமுறுக்கேற்றும். வீரியத்தைக்கெட் டிப்படுத்தி அதிக வயதாலும், பலவீனத்தா லும், நேரிட்ட சகலவித சோர்பு, நரம்புத்தள ர்ச்சி, தாதுநஷ்டம், முதலியவைகளைநீக்கித் தாது புஷ்டியை உண்டாக்குவதில் இதற்கு மின்ஞின ஔஷதமில்லை. பரீக்ஷைக்கும் பல னுக்கும் உத்தரவாதம். 50 பில்ஸ் ரூபா 10. 20 பில்ஸ் ரூபா 5. மாதிரிக்கு 5 பில்ஸ் ரூ. 1 பத்தியமில்லை பேப்பரைக் குறிப்பிட்டெழுத வேண்டும்.

### நற் சாக்ஷிகள்.

புதுச்சேரி மிஸ்டர் K. அரங்கசாமி செட்டியார் எழுதுகிறார்:—தங்க மாத் திரையை 11 நாள் தான் உபயோகித் தேன். அதன் அருமையான பலனை என்னவென்று சொல்லுகிறது! தாது புஷ்டிக்குத் தங்கள் தங்க மாத் திரை மிகவும் நல்ல மருந்து. அதன் பெருமையை எழுதி முடியாது!

பினங்கு, [illegible]. மிஸ்டர் B. M. டாஸன் H. M. G. எழுது கிறார்:—காதுபுஷ்டிக்கு அநேக டாக்டர் களிடம் ரொம்ப பணத்தை விரயம் செய் திருக்கிறேன். தங்கள் தாதுபுஷ்டி மரு ந்துபோல் நான் பார்த்தமட்டிலும் இது போல் எவ்விடமும் கிடையாது! ரொம்ப வும் நல்லது.

### டூத் பவுடர்.

பொறுக்க முடியாத பல் வலியா! ஒரு நொடியில் நிருத்தும்! பல் அசைவு பல் ஆட்டம் எகிர் கரைவு எகிர் வீக்கம் வலி, பல் புழுக்குடைச்சல் இரத்தம் வடிதல், பல் கூச்சம் வாய் நாற்றம், உடனே நீக் கும்! கண்டிப்பாய் பற்களை கெட்டிப்படுத் தும்! ஆயுள் பரியந்தம் தந்தரோகம் அணுகாது. 3 அவுன்ஸ் அணா 9 அரை டஜன் [illegible]-2-0 வி. பி. சார்ஜ் 5 அணா டஜன் [illegible]-4-0 சார்ஜ் இனாம்.

ஆர் எம். கே. வேல்சாமி,
ஜூனி அவுஷதசாலை பழனி.

---

## 144 பக்கங்களடங்கிய புத்தகம் இனாம்!

என்றுமழியாத ஆரோக்கியமும், சுகம், சந்தோஷம், இவைகளோடு கூடிய நீண்ட ஆயுளும் புராதன நூல்களில் சொல்லிய விதி களை அனுசரிப்பதினுலுண்டாகின்றன. இவ் விதிகளை நீங்கள் எழுதில் அறியும் பொருட்டு எம்முடைய லோகப்பிரசித்தமான

### வைத்திய வித்தியா!!

என்னும் புத்தகத்தில் சுருக்கமாய் வரைந்திருக்கிறோம். இச்சிறந்த புத்தகம், சுக வழியைக்காட்டி நல்ல ஆரோக்கியத்துடனும், எப்பொழுதும் திடகாத்திரமாயும் நீண்ட ஆயுளோடிருக்கும்படிசெய்து நல்ல அதிர்ஷ் டத்தைக்கொடுக்கும். வேண்டுவோர்க்கு இப் புத்தகம் விலையும் தபால் சார்ஜுமில்லாமல் இனமாய் அனுப்பப்படும். தேவையுள்ளோர் சீக்கிரம் தமது முழு விலாசத்தைத் தெளி வாய் எழுதக்கோருகிறோம்.

இராஜ வைத்திய
நாராயணஜீ, கேசவஜீ
ஆயுர்வேதோப ஔஷதாலயம்,
நெ' 177 சைனுபஜார் ரோட்,
சென்னை.

---

## நகரத்தார் மானேஜ்மெண்டில் நடப்பது.

### கட்டட முதலியவைகளுக்கு வெள்ளைக்கல் வகையராவின் விளம்பரம்.

கட்டடங்களுக்கு வேண்டிய பட்டியல் பலகினுசுகல,16பட்டை8பட்டைநாகபந்தக்கல் கள் 6பட்டைகல்கள், ஜோடி ரவுண்கால்கள் கீழ்ச்சல்லி, மேற்சல்லி தூப்பாய்க்கல்கள்,முத லிய பலவகைச் சாமான்கள் வெகுநயமாகவும், விலைசரசமாகவும்வேண்டியவர்களுக்குத் தாம தமல்லாமல் அனுப்பியும் சென்ற 9, 10 வரு ஷங்களாக வேலை நடத்திவருகிறோம். எப் போதும் மேற்படி சாமான்கள் தயாராகவே இருக்கின்றன. அநேகர் தொழிலாளிகளிடம் முன்னுடியே பணத்தைக் கொடுத்துவிட்டுச் சமயத்துக்குச் சாமான்கள் வந்துசேராமல் மிக அவதிப்படுகிறார்கள். எங்களிடமோ அப்படித்தாமசங்கிடையாது. ஆர்டர்கொடுத் தால் சாமான்களை அனுப்பிவைப்போம்.அதன் மேல் கிரயத்தைப் பெற்றுக்கொள்ளுவோம். சாமான்கள் வாங்க விரும்புகிறவர்கள் அடியிற்கண்டவிலாசத்திற்கு எழுதிக்கொள் ளலாம்.

இங்ஙனம்
அள. பெரி. பெரியண்ணன் செட்டி.,
ராயவரம்

## பூலாங்குறிச்சியில் ஆத்திக்காடு தெற்கூர். ஸ்ரீமான் கரு. முத்து. தியாகராஜன் செட்டியாரவர்கள் செய்த பிரசங்கத்தின் ❋ விஷய சங்கிரகம். ❋

திருவமைந்த சீராளரே!

இன்று, இப்பெரிய கூட்டத்தைக் காணவும், அதோடு, உங்கள் மத்தியில், நான் பேசவுங் கிடைத்த பாக்கியத்தைக் குறித்து, மிகவுஞ்சந்தோஷிக்கின்றேன்.

நம்மவருள், இருபாலரும், இப்படிச் சந்திப்பது மிக அருமை. அப்படியிருக்கத் தெய்வ சங்கல்பத்தால் இங்கே யாவரும் கூடியிருந்து, என்னைச் சிறிது பேசும்படி, நீங்கள் வற்புறுத்தியதனால், உண்மையில், பேசும் சக்தி குறைந்த எனக்கு, என்னை அறியாமலே ஓர் ஆனந்தம் உண்டாகி, ஏதோ சிறிது பேசி, உங்களை மகிழ்விக்கும் பொருட்டு, என்னைத் தூண்டிவிட்டது. ஆகவே உங்களுடைய பூர்ண சம்மதத்தின்பேரில், "உபகாரம்" என்னும் விஷயத்தைப் பற்றி நான் அறிந்தவாறு சிலவற்றைச் சொல்ல விரும்புகிறேன்.

அன்பர்களே!

உயர்ந்தோர், சமத்தவர், தாழ்ந்தோர், ஆகிய மூன்று பகுப்பினருள், யாருக்காயினுந் துன்பம் நேரிடுமானால், அதைத் தன்னாற் கூடியவரை நிவர்த்தி செய்வதே உபகாரமாகும். நம்முடைய நன்மை ஒன்றையே கருதி நிற்பது, உயர்வானதன்று. நமக்கும் நம்மினத்தாருக்கும், நம்மைச் சூழ்ந்துள்ளவர்களுக்கும், தூரத்தேயிருக்கும் அயலார்களுக்கும் ஒத்த உணர்ச்சிகொண்டு நடப்பதே அதிக சிலாக்கியமாகும். நமது முன்னோர்களில், சிபி யென்று சொல்லப்பட்ட சக்கரவர்த்தி யொருவர், ஒரு புறாவிற்காகத் தமது தேகத்தைத் தத்தஞ் செய்தாரென்றும், ததீசி யென்னும் மகாரிஷி, தேவர்களுடைய துன்பம் நீங்குமாறு தமது முதுகு எலும்பை உதவினாரென்றும், இன்னும் இது போன்ற பல அருமையான விஷயங்களைக் கேட்டும், படித்துமிருக்கிறோம். அன்பில்லாதவர்களெல்லாம், தமக்கே சொந்தமாவர், அன்புடையாரென்னிலோ, அவர்கள், எலும்பு கூடப் பிறருக்குச் சொந்தமென்றால், உபகாரஞ் செய்வதற்குக் காரணமாயிருக்கும் அவ்வன்பை எப்படித்தான் வரையறுத்துச் சொல்ல முடியும். திருவள்ளுவ நாயனாரும், நமது தமிழ்வேதத்தில் "அன்பிலாரெல்லாந் தமக்குரியார் அன்புடையார், என்புமுரியர் பிறர்க்கு" என்று சிலாகித்து எழுதியுள்ளார். பூமியிலுள்ளவர்கள் கஷ்டப்படுவதைப் பார்த்து, மேகம் கடலுக்குச் சென்று, உப்பை நீக்கி நன்னீரை மொண்டுகொண்டு வந்து மழையாய்ப் பெய்து கொடுப்பது யாவரும் அறிந்த விஷயமே யல்லவோ. மேகம், மனிதர்களிடமிருந்து என்ன உதவியைப் பெறப்போகிறது. ஒன்றுமில்லை. ஆனால் மேகஞ் செய்துவரும் உபகாரத்திற்கு எதைப் பிரிந்து சொல்லக்கூடும். கேவலம், மேகத்திற்கே இந்த குணமிருக்குமானால், மனிதனுக்கு உபகாரஞ் செய்யவேண்டுமென்ற எண்ணமிருக்கவேண்டியது எவ்வளவு முக்கியமாகும்.

உபகாரமென்பது, ஆண், பெண், என்ற இருவருக்கும் பொதுவான காரியமாகும். நகத்தில் வலி வந்தால் அங்கமெல்லாவற்றிற்கு மெப்படி அதிற் பங்குண்டோ, அதுபோலவே ஒருவருக்குத் துன்பம் வந்தவிடத்து, எல்லோருக்கும் அதிற் சிறிது பங்குண்டு. நம்மவருள் பெண்கல்வி அதிகமில்லாமையினால், பெரும்பாலார் உபகாரமென்பதின் உண்மைப் பொருளை அறியார்கள். சிநேகமிருக்கும் போது மாத்திரம் அயல் வீட்டுக் குழந்தைகளுக்கு ஏதாவது தீங்கு நேரிட்டால் தாங்கள் பரிந்து முன் நிற்பார்கள். சிறிது மனஸ்தாபமிருந்து விட்டாலோ, இவர்களிருப்பது ஈந்து காத்திற்கு அப்புறந்தான். இக்கொள்கை முற்றிலும் பிசகு. "ஊரார்பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்பது பெரியோர் கூறும் பழமொழியாம். ஒருவருக்கு ஒரு நன்றி செய்தால், அது எப்போது பிறிது பிரயோசனமாகுமென்று நினைக்கவேகூடாது. தென்னை மரத்திற்கு நாம் பாய்ச்சும் நீர், அம்மரவேர்களால் கிரகிக்கப்பட்டு அனியில் இளநீருக்குள் தங்கி நமக்குப் பிரயோசனப்படுவதுபோல், நாம் செய்த உபகாரமும் அதன் பயனை இம்மையிலாவது, மறுமையிலாவது தருமென்பது நிச்சயமான காரியமாகும்.

இனி, உபகாரஞ் செய்வதும், பாத்திரமறிந்தே செய்யப்படவேண்டும். மதுபானஞ் செய்ய விரும்பும் ஒருவனுக்கு உபகாரஞ் செய்வது. அவனுக்கு அந்நேரத்தில் நன்மையாகத் தோன்றினாலும் உண்மையில் அக்குடிகாரனை மேலுங் கெடுத்ததான தோஷம் சம்பவிக்கிறதேயொழிய வேறில்லை. ஆகவே, நல்ல காரியங்களுக்கு உதவி செய்யவேண்டுமென்பதே உத்தமமாயிற்று. தீய காரியங்களை ஒருவன் செய்ய விட்டுக்கொண்டிருப்பதும் பெரும் பாவம். அவனை நல்வழிக்குக் கொண்டுவர உதவி செய்தலும் ஒரு பகுப்பாகும். உபகாரமே வேண்டாதிருக்குமொருவனுக்கு ஊரார் தன்னை மெச்சவேண்டுமென்று கருதி, உபகாரஞ் செய்வது முற்றிலுங் கூடாததாகும். இது எதுபோல என்றால், பூர்த்தியாய்ச் சாப்பிட்ட ஒருவனுக்கு மீண்டும் சாப்பாடு இடுதலை ஒக்கும். ஆகவே பாத்திரமறிந்தே உதவி புரியவேண்டும். இதுவரைக்கும் உபகாரத்தைப் பற்றிச் சொல்லிவந்தேன். இனி இதனோடு மஞ்சுவிரட்டுக்கு என்ன சம்பந்தமிருக்கிறதென்று சிறிது சொல்லுகின்றேன். மஞ்சுவிரட்டும் ஓர் வகையான உபகாரமே. எப்படியென்றால், மஞ்சுவிரட்டு நடக்கும் இடத்திற்குப் பல ஊர்களிலிருந்தும் ஜனங்கள் வருகின்றார்கள். இதனால் பல வண்டிக்காரர்களுக்கு வாடகை கிடைக்கிறது. வேடிக்கை நடத்தும் இடத்தில் மாட்டைப் பிடித்து விடுகிறவர்களுக்குப் பல லாபமும் உண்டாகிறது. கடைக்காரர்களுக்கும், இதரர்களுக்கும் பணங் கிடைக்கிறது. இவைகள் தாம் மஞ்சுவிரட்டினாலுண்டாகும் நன்மை. தீமைகளைக் கவனிப்போம். முதல் முதல் கொலை அவசியம் நேரும். ஏமாற்றத்தால், கலகம் விளையும். பல மாடுகள், அளவுக்கு மிஞ்சி ஓடுவதால் குடலறுந்து மாளும். திருடர்கள், வேடிக்கை பார்க்கவந்தவர்களூடே திரிந்து, பொருளபகரிப்பார்கள். பொது மகளிர் கண்காட்சியிலநேகர் அகப்பட நேரும். சிறு குழந்தைகள் தப்பிவிடக்கூடும். இப்படியாய் யோசித்து யோசித்துச் சொன்னால், தீமையின் தொகை, நன்மையினும், பதின்மடங்கு அதிகரிக்கும். இந்த வேடிக்கையினாலென்ன பிரயோசனம். காசைக்கரியாக்குவதே கண்கண்ட சித்தி. இது என்ன திருவிழாவா? எந்தச் சுவாமியைப்பகண்டு தரிசித்துப் பயனடையப் போகிறார்கள்? நாகரீகமில்லாத காலத்தில், படிப்பு வாசனையில்லாத மகாத்மாக்களுக்கு, இந்த மஞ்சு விரட்டு, பெரு ஆடம்பரமான வேடிக்கையாயிருந்தது. நாகரீகமாகிய சூரியன் உதித்துக் கிரணத்தை விரித்து எங்கும் வெளிச்சமுண்டாக்கிக்கொண்டு வருகிறபோது, அறைக்குள்ளே ஓடிக் கதவை மூடிக்கொள்ளுதல் போல, இவ்விதமான அக்கிரம வேடிக்கைகளை, அடியோடு தொலைத்து விடாமல், எல்லோருங் கண்மூடித்தனமாயிருப்பது, உபகாரமன்று. ஐரோப்பா தேசத்தில், ரோமாபுரியில், மஞ்சு விரட்டு இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இருந்ததாகத் தேச சரித்திரங் கூறுகிறது. இப்போது அத்தேசம் என்ன நிலையிலிருக்கிறது என்று விரித்துச் சொல்லாமல், ஒரே தொடரில் சொல்லுகிறேன். அந்தத் தேசம் இப்போது உயர்ந்த நாகரீக தேசத்திலொன்றாயிருக்கிறது. நாமெல்லோரும் நல்ல நிலைக்கு வரவேண்டுவதற்கு எல்லோருங்கூடி உபகாரஞ் செய்யவேண்டும். இந்தச் சந்தர்ப்பத்தில் அது என்ன உபகாரமாயிருக்குமென்று நான் சொல்லாமலே நீங்களறிவீர்கள். இவ்வூரில், ராம. பவ. வகையாரக்காரர் முயற்சிசெய்தால், அவசியம், இக்கொடிய வேடிக்கையை நிறுத்தி விடலாம். இதற்கு அனுகூலமாய் நிற்க விரும்புவோர், இப்போது கையை உயர்த்துவதனாலறியச் சுலபமாகும்...... 10, 12 பேரைத்தவிர, அநேகமாய் மற்றவரெல்லாம், கையை உயர்த்தியிருப்பதினாலும், "முயற்சிப்போம்" என்று உண்டாகும் வார்த்தையாலும், எனக்கு மிகுந்த மகிழ்ச்சியுண்டாயிருக்கிறது.

கனவான்களே! உங்கள் சொல்லை விரைவில் நிறைவேற்றுவீராக. இதுவே பேருபகாரம்!

"ராமபாணம்."





3

உ
குகமயம்.



# Editorial.

## வைசியமித்திரன்
1912ஞு ஏப்ரல்மீ 1உ
தேவகோட்டை.

### ❋ பிரதமக்கல்வி மசோதா. ❋

கல்கத்தா சட்ட நிரூபண சபைக்கு ஸ்ரீமான் கோகலே கொண்டுவந்த பிரதமக்கல்வி மசோதா நிறைவேறாது போயிற்றென்று, நாம் சென்றவாரங் குறிப்பிட்டிருந்தோம். இம்மசோதா முதல் வெளிவந்ததிலிருந்து, இந்தியாவின் பற்பல பாகங்களிலும், பிரதமக் கல்வியை அபேக்ஷிக்குமவரெல்லாங் கூடிச் சாதகமாகவே பேசித் தீர்மானங்களை வெளியிட்டார்கள். மாகாண கவர்ன்மெண்டாருக்கு மாத்திரம், இஷ்டமில்லாதிருந்தது. பிரமதக் கல்வி, கட்டாயமாக்கப்படுவதைக் குறித்துச் சில திருத்தப்பாடுகளும், அம்மசோதாவிற் செய்யப்பட்டன. இம்மசோதா பிறந்த காலத்து ஜாதகப் பலன் சரியாயில்லாமையின், இது தவறிவிடுமென்றே ஸ்ரீமான் கோகலே கருதிப் பற்பல பாகங்களிலுஞ் சென்று, பரிகாரங்கள் செய்துவந்தார். எவ்வளவு செய்தும் ஜாதகப்பலன்படி, யமைந்துவிட்டதே பெரும் விசனத்தைத் தருகிறது. சட்டசபையில், ஆனரபிள் மிஸ்டர் ஹார்கோர்ட் பட்லர் பேசிய பேச்சு, மிகுந்த வியப்பையுண்டாக்குகிறது. நமது மகாராஜா சக்கரவர்த்தியவர்கள், பொது ஜனக்கல்வி மிக அவசியமென்பதைக் குறித்துத், தர்பாரில் 50 லக்ஷ ரூபாய் நன்கொடை கொடுத்திருக்கிறார்கள். அதனாலுண்டான சந்தோஷத்தோடு, இம்மசோதாவும் நிறைவேறியிருக்குமானால், சர்க்கரைப்பந்தலில் தேன்மாரி பொழிந்ததை ஒத்திருக்கும். பிரதமக் கல்வியைக் கட்டாயமாக்குவதினாற் செலவு அதிகமேற்படுமென்றதைச் சரிப்படுத்திக்கொள்ளுவதற்கு, ஸ்ரீமான் கோகலே ஒரு உபாயங்கூறினர். கடற்றுறைத் தீர்வையை நூற்றுக்கு 2 விதம் அதிகப்படுத்தினால், அதுவே சரிக்கட்டுமென்றும், மொத்தச்செலவில் அரசாங்கத்தார் மூன்றில்இரண்டு பங்கும், லோக்கல் பாடிகள் மூன்றில் ஒரு பங்கும்எடுத்துக் கொண்டால்அதுவும் சிலாக்கியமாகுமென்றுங் கூறியிருந்தார். என்னசொன்னாற்றானென்ன. மசோதாவுக்கு ஆயுள்பூர்த்தியில்லையென்றால், இந்த மருந்தெல்லாம், அதுஉயிரோடிருக்கப் பிரயோசனப்படுமோ? இதேசட்டசபையில், மிஸ்டர், தாதாபாய் கொண்டுவந்த வருமானவரி மசோதாவை. ஸ்ரீமான் கோகலேயும், மிஸ்டர் சுப்பராவும், நிராகரித்துப் பேசிவிட்டார்கள். இம்மசோதா நிறைவேறியிருக்குமானால், 1500 ரூபாய் வரும்படியுள்ளவர்களுக்கே, வரி விதிக்கப்படும். ஆகவே ஒரு வருடத்தில், அரசாங்கத்துக்குரிய இந்த வருமானத்தில் இருபத்தொன்பதேகால் லக்ஷ ரூபாய் குறைந்துவிடும். பிரதமக் கல்விக்கே பணம் வேண்டுமென்றுவிவகாரமிருக்கும்போது இந்த மசோதாவை நிறைவேற்றிவிட்டால், தமது மசோதா முற்றிலுந் தூர்ப்பலப்பட்டுவிடுமென்றே கருதி ஸ்ரீமான் கோகலே, நிராகரித்துப் பேசினாரென்று எமக்குத் தோன்றுகிறது. ஜனங்களுக்குப் பிரதிநிதிகளாயிருக்குஞ் சட்டசபை அங்கத்தினர், ஜனங்கள் பக்கத்துக்குச் சாதகமாய்ப் பேசாமல், விரோதமாய்ப் பேசியது எப்படி முடிந்துவிட்டது? பிடிகொப்பும் போய், மிதி கொப்பும் போய்விட்டது. வயிற்றுப்பிள்ளையை நம்பி மாட்டுப்பிள்ளையை இறக்கவிட்டது போலாயிற்று. (இந்த வருமான வரி மசோதாவைப் பற்றி விரிவாக அடுத்த முறை வரைவோம்.)

எத்தனையோ பாடுபட்டும், பிளவுபட்ட இடங்களுக்கெல்லாம், ஒட்டுகள் போட்டும், ஆனரபிள் மிஸ்டர் பட்லர் பேசிய பேச்சால் எல்லாம் வெயில் மஞ்சளாய்விட்டன. ஆனரபிள் மிஸ்டர் பட்லர் எடுத்துக்கொண்ட சில முக்கிய மறுப்புகளாவன:— 1. கட்டாயப் படிப்பை ஜனங்கள் விரும்பவில்லை. 2. ஜாதி மதபேத நிறைவு. 3. கீழ் உத்தியோகஸ்தர்கள், ஏழை ஜனங்களை வருத்துவது. 4. பொருட் குறைவு. 5. எலிமெண்டரிப் படிப்பே போதுமானது. முதலியனவாம். 4, 5 ஆகிய அம்சங்களைப்பற்றி நமக்குப் பேசவேண்டிய அவசியம் இப்போதில்லை. கட்டாயப்படிப்பை ஜனங்கள் விரும்பவில்லைஎன்று அவர் சொன்னதுபொருத்தமானதன்று. தாகத்தால் வருந்துபவர்களுக்கு ஜலக்கஷ்டத்தை நிவர்த்தி பண்ணாமல், தாகமேயில்லையென்று சொல்வது, கொடாத இடையன் சினை ஆட்டைக்காட்டியதையே ஒக்கும். ஜாதி மதபேத நிறைவு ஒரு காரணமென்றார். மழை வழங்க எண்ணினால், ஜாதி மதத்தைக் கவனிக்கலாமா? ஏதோ பெய்வதைப் பெய்தால் ஆனது ஆகிறது. கடைசியிலல்லவோ பலனைப்பார்க்கவேண்டும். ஜப்பான் சிங்களம் முதலிய தேசங்களைப்போல இந்தியாவும் ஒரே சோங்கையளவு விஸ்தீரணமுடையதா? அத்தேசங்களில், ஜாதி, மதபேதம் பெரும்பாலுமில்லையென்பது ஒரு காரணமாகாது. இந்தியாவில் எத்தனையோ நூற்றாண்டுகளாக ஜாதி மதபேதங்களிருந்தே வந்திருக்கின்றன. அவைகள் முற்றிலும் ஒழியப்போவதே கிடையாது. எப்போதுதான் ஒழியுமென்றாலோ, வடதுருவமும், தென் துருவமும் ஒன்றாகச் சந்திக்கவேண்டும்அல்லது இரண்டுஞாயிற்றுக்கிழமைகள் ஒரே வாரத்தில் சந்திக்கவேண்டும். அப்போதுதான் அதுசாத்தியமாகும். இதனாலே வெறும் மனப்பால் குடிக்கவிடலாகாது. மூன்றாவது கீழுத்தியோகஸ்தர் தொல்லை யென்றார். கீழுத்தியோகஸ்தர் மாத்திரம், தங்களுக்கு மேலுத்தியோகஸ்தரில்லாது, சுயேச்சையாயிருப்பார்களானால், அப்போது அவர்களை ஒரு காரணமாகக் கொள்ளுவது நியாயமாகும்.

பரோடா ஒரு சிறு ராஜ்ஜியமே, அதிற் பல ஜாதி, மதபேதங்களிருக்கின்றன. இருந்தும் கட்டாயப்படிப்புப் பயன்தரவில்லையா? இந்தியாவின் விஸ்தீரணத்தையும், அதன் முழுவதிற்குஞ் செல்லுஞ் செலவையுங் குறித்து ஆலோசித்தால் இப்போது சாத்தியமாகாதென்றே தோன்றும் என்றாலும் நூறு பங்குசெய்வதற்குப்பதில் பத்துப் பங்காவது செய்யலாம்! என்பது தான் வேண்டுகோள். அப்படிப் பத்துப்பங்காவது நடந்திருக்கலாம். ஆனால் இந்தியப் பிரஜைகட்கு அதிர்ஷ்ட பலம் அதிகமில்லை. முடிவில் ஸ்ரீமான் கோகலே பேசியதைக் கேட்டால், சாதாரணமானவர்களுக்கும் மனது உருகிவிடும். அவர் நிலை யிப்போது எப்படியிருக்கிறதென்றால், வழுக்கு மரத்திலேறிப் பொற்கிழி பெற விரும்பி முயற்சித்துக் கடைசியில் சித்தியடையாது, அடித்தலத்திற்கே வந்துவிட்டதையே போன்றிருக்கிறது. இவ்வளவோடு விட்டுவிடாமல், இம்மசோதா சட்டமாய் நிறைவேறும் வரை வருடா வருடம் சட்டசபைக்குக் கொண்டுவரப்படுமென்று, அவர் கூறியதொன்றைக்கேட்டு எமக்கு சிறிது உற்சாகமும், நம்பிக்கையுமுண்டாயிருக்கின்றன:

"ஆகும்போதெல்லாமாகுமே" என்றபடி எதிர்காலத்தையே யாவரும் பொறுமையோடும், நம்பிக்கையோடும் நோக்கக்கடவர். கடவுளை நம்பினோர் கைவிடப்படார்.




இராமநாதபுரம் ஜில்லா திருப்பத்தூர்த் தாலுகா காரைக்குடியிலிருக்கும், தெ. மெ. ராம. வெங்கிடாசலம் செட்டி தெரிவிப்பது என்னவென்றால்,

எனது குமாரன் சுமார் 18 வயதுள்ள மெய்யப்ப செட்டி என்பவன் சேர்க்கை தோஷத்தால், நம்முடைய வருதிக்குக் கட்டுப்படாமலும், குடும்பத்தில் ஒத்திராமலும் நடத்தைப் பிசகாய்ச் சில துன்மார்க்கர்களுடன் கூடி துர்விநியோகம் செய்வதால் மேற்படியானுக்கு யாராவது கடன்கொடுத்திருந்தாலும், இனிக் கொடுத்தாலும், மேற்படி கடனுக்கு நானும் என் குடும்பத்தைச்சேர்ந்த ஸ்தாவர சங்கம சொத்துக்களும் கட்டுப்படத்தக்கதல்லவென்பதை இதன் மூலம் தெரிவிக்கிறேன்.

தெ. மெ. ராம. வெங்கிடாசலஞ் செட்டி,
காரைக்குடி.
25—3—1912.

## வைசியமித்திரனாற் கெடுதியுண்டா?

வைசியமித்திரனால் பல நன்மைகளுண்டென்பதற்கு நம்மவருள் தக்கார் பலர் தங்கள் நல்லபிப்பிராயங்களை மித்திரன் வாயிலாக வெளியிட்டதே போதியசான்றாகும். மித்திரன் தோன்றி ஒரு வருஷமாகுமுன் அதற்குச் சில விரோதிகளும் தோன்றியிருப்பதாகக் கேட்டு விசனிக்கிறோம். நீதியும் நடு நிலையுமுள்ள எந்த மனிதனும் பத்திரிகைகள் விருத்தியடைவதில் நல்லெண்ணமில்லாதிருக்க மாட்டான். நம்மவர் பல திருத்தப்பாடுகளையடைய வேண்டிய இந்தச் சமயத்தில் ஒரு பத்திரிகை நமக்கென்று தனியே தோன்றியிருப்பதற்கு எவ்வளவோ சந்தோஷத்தோடு அதை விருத்திக்குக் கொண்டுவர முன் வருவதைவிட்டு அதற்கிடையூறு செய்வதென்றால் யாருக்குத்தான் வருத்தமுண்டாகாது. தாட்சணியத்துக்காவது டாம்பீகமான ஆரவாரத்துக்காவது அஞ்சி மனச்சாக்ஷிக்கு விரோதமாக விஷயங்களை எழுதுகிறவர் பத்திரிகை நடத்துவதற் கருகரன்று. நம்மித்திரன் பத்திராதிபர் தம் பொறுப்பையும் கடமையையும் நன்குணர்ந்து விஷயங்களை யெழுதி வருகிறாரென்பதை நியாயவாயிலாக யாரும் ஆக்ஷேபிக்க முடியாது. கடிதக்காரர் அபிப்பிராயத்திற்குப் பத்திராதிபர் உத்திரவாதியல்லர் என்பது தெரிந்த விஷயம். கடிதக்காரராவது பத்திராதிபராவது தப்பிதமாக ஏதேனும் விஷயங்களை எழுதினால் உடனே அதைத் தக்கபடி மறுத்து எழுதி அப்பத்திரிகையிலாவது பிறபத்திரிகைகளிலாவது பிரசுரித்திடுதல் தற்கால வழக்கமும் நாகரீகமுமான விவேகமாகும். அங்ஙனமின்றி எய்தவனிருக்க அம்பை நோவது போற் பத்திரிகைக்கு இடையூறு செய்வது பெருமைதானா? என் செய்கைக்கு விரோதமாக விஷயங்கள் எழுதப்பட்டிருந்தால் நான் எழுதிய பேனாவையாவது கடிதத்தையாவது கெடுத்துவிட முயலாமா? அது எனக்கு அவமானமில்லையா? என் செய்கை ஒருவாறு ஞாயமாக இருக்க அது தப்பாக எழுதப்பட்டிருந்தால் நான் பகிரங்கமாக என் கொள்கையை ஸ்தாபிக்க முன் வருவதில் என்ன ஆக்ஷேபம்? எனக்குச் செல்வாக்கிருந்தால் நான் அதை நல்ல விஷயத்தி லுபயோகித்து இருமைப் பயன்களையும் கெடுத்துக்கொள்வது பரிதபிக்கத்தக்கது. "முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒரு பிடி சாம்பராகுவர்" அன்றோ. ஏதோ நமது சரீரமிருக்கும் சிலகாலம் வரையிலாவது செருக்கு, அகங்காரம், மமதை முதலிய தீய குணங்களைவிட்டு பரோபகாரியாக, நமக்குச் சிறிது கஷ்டமுண்டானாலும் பிறருக்குத் தீமை செய்யாமல் நல்ல காரியங்களைச் செய்து புகழையும் புண்ணியத்தையும் பெற வேண்டும். நம்மை அஜகாயசூரன், திக்கு விஜயஞ் செய்தவன் என்றுசொன்னாலும் அது நமது சரீரத்தோடு போய்விடுமேயன்றோ. இதை யுற்றுநோக்கித் தக்கபடி நடந்துகொள்ளுதலன்றோ அறிவின் பயன். ஒன்றை விருத்தி செய்வது தான் கஷ்டம். கெடுப்பது சுலபம். அது யாரும் செய்துவிடலாம். ஆனால் அது பெருந்தன்மையன்று.

நமது வைசியமித்திரனா லின்னும் பல நன்மைகள் நம்மவருக்குண்டாக வேண்டியதிருக்கின்றனவாதலின் அந்தப் பெரிய காரியத்தை நினைத்துத் தமது சிறிய கோபத்தைவிட்டு மித்திரன்விருத்தியடையும் வழியில் முயலுவாராக. மித்திரனால் ஏதேனும் கெடுதலுண்டென்றால் அதை யாவரு மறியும்படி இன்னதென்று வெளியிடுவாராக.

M. சின்னையா செட்டி.
மகிபாலன்பட்டி,

## புத்தகவரவு.

### சைவத்திருநெறிப் பன்னிரு திருமுறைத்திரட்டு.

இந்நூல், யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் மருகரும் மாணாக்கரும், வித்வசிரோமணியுமாகிய, ஸ்ரீமத் ந. ச. பொன்னம்பல பிள்ளையவர்கள், மாணாக்கரும் யாழ்ப்பாணத்து இந்து காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய ஸ்ரீமான் ஆ. மு. சோமாஸ்கந்த பிள்ளையவர்களால், சைவநெறியிலொழுகும், அன்பானவருக்கும் நன்குபயன்படுமாறு, முறையாய்த்திரட்டப்பெற்று, சுத்தமான முத்துப்போன்ற எழுத்தில் பொறிக்கப்பெற்றுள்ளது. இந்நூல் யாருக்காகச் செய்யப்பட்டதோ அவர்களுக்கு வேண்டிய பலனைத் தருமென்பதில் ஐயமின்று. இதன் பிரதியை எமக்கு அனுப்பிய நூலாசிரியருக்கு வந்தனஞ் செலுத்துகின்றோம்.

### வேதாகம உண்மை. பஞ்சாதிகார விளக்கம்.

விருதை ஸ்ரீ சிவஞான யோகிகளியற்றிய வேதாகம உண்மை என்ற நூற்பிரதியும், திருப்போரூர் ஸ்ரீசிதம்பர சுவாமிகளியற்றிய பஞ்சாதிகார விளக்கம் என்ற நூற்பிரதியும் வரப் பெற்றோம். இவை எக்கருத்துபற்றி இயற்றப்பட்டனவோ, அதை அவசியம் தருமென்பதில் ஐயப்பாடு இன்றாம். இவைகளைக் காணுகொத்தான் வாசியும், செந்தமிழ்க் கலா விநோதரும், பரோபகாரச் சிந்தை பொருந்தியவருமான, ஸ்ரீமான் சா ராம மு சித பெத்தாச்சி செட்டியாரவர்கள் பொருளுதவி செய்து அச்சிட்டு அனைவருக்கும் உதவியிருக்கின்றனர். இவைகளை எமக்கு அனுப்பிய ஸ்ரீமான் செட்டியாரவர்கட்கு எமது உழுவலன்பு பாராட்டுவதோடு, அவர்கள் நீடு வாழ்ந்து இன்னம் பேருதவி புரியுமாறு கடவுளைப் பிரார்த்திக்கின்றோம்.

## உள்ளூர் வர்த்தமானங்கள்.

காலநிலை;—அநேகருக்குக் கருணையில்லை. இரவில் இறுக்கமும், புழுக்கமும் அதிகம். வெயிலதிகத்தால் விஷபேதியுண்டாகிறதுபோலும்.

அகவிலை:—நெல் 120 படி ரூபாய் 14, சமீபத்தில் இவ்விலை இறங்குமென்று கனவுங் காணமுடியாது. இதுவே இப்படியானால், மற்ற விலை வாசிகளைக் குறித்துக் கேட்பானேன்.

பெருமாள்கோவி லுத்ஸவம்:—வடகலைப்பெருமாள் கோவிலில், உத்ஸவம் வெகு விமரிசையாய் நடந்து வருகிறது. ஜனங்கள் கண்டு மகிழ்வதற்குச் சந்திரனும் உதவியாயிருக்கிறான்.

சத்காலக்ஷேபசபா:—இச் சபாவில், ஸ்ரீராம நவமி ஆரம்ப முதல் ஒவ்வொரு தினத்திலும், திவ்ய காலக்ஷேபங்கள் நடைபெறுகின்றன.

எலிமென்டரி ஸ்கூல்:—மாணவரின் தொகை வர வர அதிகரித்து வருகிறது, இவ்வூர்வாசிகளின் விழிப்பைக் குறிக்கிறது: இந்த ஸ்கூலில் உதவி உபாத்தியாயரொருவர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

ஜலக்கஷ்டம்:—குடிதண்ணீர்க் குளங்கள், காய்ந்துவிட்டன. ஜனங்கள் வேகும் வெயிலில் வெகுதூரம் போய் நல்ல தண்ணீர் எடுத்துவருகின்றனர். குழாய் வைப்பதற்காகத் தெருத் தெரு வாய் அளக்கின்றனர். எப்போது முடிந்து ஜலக்கஷ்டம் நிவர்த்தியாகுமோ?



## பொது வர்த்தமானங்கள்

### குன்றக்குடி உத்ஸவம்.

பங்குனி உத்திரத்திற்கு ஏராளமான ஜனங்கள் போகின்றார்கள். இரவும் பகலும் ரோட்டில் செந்தூள் பறந்துகொண்டேயிருக்கிறது.

### புதுக்கோட்டை.

இவ்வூர்வாசிகள் இந்த மாதம் முதல் தேதி முதல் தங்களூரில் முனிசிபல் அதிகாரத்திற் பாத்தியதை பெறுவார்களென்று சொல்லப்படுகிறது.

### ரங்கூன் ரெயில்வேஸ்டேஷன்.

81 லக்ஷ ருபாய் செலவு செய்து புதிதாய்க் கட்டப்பட்டிருக்கும், புதிய ரயில் ஸ்டேஷனை லெட்டினன்ட் கவர்னர் திறந்துவிட்டுப் பிறகு, மெய்மியோவுக்குப்போவார்.

### தென்னிந்தியா ரெயில்வே.

இப்போது திருச்சிநாப்பள்ளியிலிருக்கும், இந்த ரெயில்வேயின் ஏஜண்ட் ஆபீஸும், டிராபிக் மானேஜர் ஆபீஸும் சென்னையில் ஸ்தாபிக்கப்படுமென்று சொல்லப்படுகிறது.

### தொழிற்சாலையில் வேலை நிறுத்தம்

கல்கத்தாவில், பெங்கால் காட்டன் மில்லில் வேலை பார்க்கும், ஒரு ஜமதார் ஒரு கூலியின் தாடியைப்பிடித்து இழுத்துக்கொண்டுபோனதினால், மற்றவர்கள் கலகஞ் செய்தார்கள். ஜமதார் வேலையிலிருந்து நீக்கப்பட்டான்.

### நவீன இயந்திரம்.

அமெரிக்காவைச் சேர்ந்த சிக்காகோ நகரில், ஜெர்மன் நிபுண ரொருவரால், ஒரு இயந்திரம் நிருமாணிக்கப்பட்டுள்ளது. அது பிரக்ஞையற்றுப்போகும், ஆண், பெண், குழந்தை முதலியவர்ந்தப் பிரதிப்பாருக்கும், விரைவில் பலனைத் தருகிறதாம்.

### ஓர் தத்துவசாஸ்திரியாரின் அபிப்பிராயம்.

அதிகப் பிரக்யாதி பெற்றுள்ள தத்துவ சாஸ்திரி ஹக்ஸ்லி என்பவர், சொல்லுகிறார்:— கடவுள் இல்லையென்று எவன் நம்புகிறானோ அவன் மூடன். கடவுளைப்பற்றி எல்லாவற்றையும் பிறனுக்குச் சொல்லுகிறவன் மகா மகா மூடன்.

### சீயதேசத்தரசர் சகோதரர்.

இவர், ஜெர்மெனிக் கடற்படையில், லெப்டினன்ட் உத்தியோகத்தில் நியமிக்கப்பட்டிருக்கின்றார்.

### பிரிட்டிஷ் கடற்படை.

"குயின் மேரி" என்றொரு சண்டைக் கப்பல், இப்போது புதிதாகக் கடலில் விறக்கப்பட்டுள்ளது. உலகத்திலுள்ள சண்டைக் கப்பல்களில் இது அதிக உக்கிரமானது.

### மைசூர் திவான்.

காலஞ்சென்ற மைசூர் திவான் சர். கிருஷ்ணமூர்த்தி என்பவரின் மனைவியாருக்கு முப்பத்தையாயிர ரூபாய் உபகாரச் சம்பளமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது: அந்த அம்மாள், மைசூரில் சமஸ்கிருத பாஷாபிவிர்த்திக்கு இத்தொகையைச் செலவிடப்போகின்றதாய்ச் சொல்லப்படுகிறது.

### ஜப்பானில் கல்யாணம்.

ஜப்பானில் பிரிட்டிஷ் பிரஜைகள் செய்துகொள்ளும் கலியாணம் 1899-ம் வருஷம் ஜூலைமீ 16உக்குப் பிற்பட்டதாயினும், சட்ட சம்மதமாகுமென்று லார்டு சபையார் கலியாண மசோதாவை 2ம் தரம் நிறைவேற்றியிருக்கிறார்கள்.

### கலகப்பெண்.

லண்டன் ஜெனரல் போஸ்ட்டாபீசில் நெருப்பிடும்படியாக முயன்ற கலகப் பெண்களிலொருத்திக்கு 6 மாதம் காவற்றண்டனை யிடப்பட்டது.

### ஒற்றர் அகப்பட்டனர்.

இங்கிலாந்தைச்சேர்ந்த ஒயிட் தீவிலுள்ள செயின்ட் ஹெலன் கோட்டைக்குள் 3 பேர் ஒற்றறிய வந்ததாகக்கண்டு பிடிக்கப்பட்டு பாதுகாப்பிலிருந்தனர் இப்போது விடுபட்டுவிட்டனர்.

### தீவர்த்திக்கொள்ளை.

விழுப்புரத்தைச்சேர்ந்த ரெட்டிப்பாளையத்தில் 20, 30 திருடர்கள் சேர்ந்து ஒரு வீட்டுக்குள் போய் 20 ரூபாய் வரை எடுத்துக்கொண்டு, பிறகு அவ்வூர் மணியகாரன் வீட்டிலும் போய் 200 ரூபாய் வரை திருடிக்கொண்டு ஓடிவிட்டனராம். எதிர்த்து வந்த ஒரு ரெட்டியைச் சமட்டிவிட்டனர்.

### தபாற்காரன் திருட்டு.

ஹாட்சோலாவிலிருந்து, சில்டாவுக்குத் தபாற் பையைச் சுமந்துகொண்டு போனவன், பையை அவிழ்த்து ஒரு பார்சலிலிருந்து சுமார் பத்தொன்பதினாயிர ரூபாய் நோட்டுகளையும், நாணயங்களையும் திருடிக்கொண்டான். அவன் போலீசில் வைக்கப்பட்டிருக்கிறான். குற்றத்தை ஒப்புக்கொண்டதாகவும் தெரிகிறது.

### ஓர் பெண் முனிஸிபல் கமிஷனர்.

டார்ஜ்லிங் முனிசிபாலிடியில், கமிஷனராக ஓர் பெண்பாலிருக்கின்றனர். அவர் பண்டிதர் சிவநாத சாஸ்திரியின் குமாரத்தியும் மிஸ்டர் ஹெம்லாலா சர்க்கார் என்பவரின் மனைவியுமாவர், அவர் இந்த உத்தியோகத்தைப்பெற்றதுமுதல் அந்த முனிசிபாலிடியில் திருத்தமும் விருத்தியும் அதிகமாம். பெண் கல்வியின் பயனல்லவோ இவ்வளவு பரிமளிக்கிறது.

### ராஜப்பிரதிநிதி.

நமது ராஜப் பிரதிநிதியாகிய லார்டு ஹார்டிஞ்சு சில பரிவாரங்களுடன் மாணவர் தங்கும் விடுதிக்குப் போய்ச் சாப்பாடு, படுக்கை முதலியவை திருப்திகரமாயிருக்கின்றனவா என்று பரிசோதித்தார். அன்றியும் மாணவரோடு வெகு நெருக்கமாய்க் கலந்தும் பேசினராம்.

### கல்லூரிப் போதகாசிரியர்.

கல்கத்தா ராஜ்ஷாயி காலேஜ்போதகாசிரியர் ஒருநாள் வீட்டை நாடி வரும்போது போலீஸ் டிப்டி சூப்ரின்டென்டெண்ட் ஆர், மிஸ்டர் டொம்பால், சைகைக்கிள் வண்டியோடு மோத நேரவே சவாரி வந்தவர் இறங்கிக் கோபித்துவிட்டுப் போய் ஒரு கேஸை உண்டாக்கினார். அது கமிஷனரால் விசாரிக்கப்பட்டதில் மிஸ்டர் டொம்பாலின் பொய்க் கேஸ் நிலைக்கவில்லை. இவ்வளவு தூரம் வந்தும் குற்றவாளி யல்லவென்றுவிடப்பட்ட சந்தோஷசட்டர்ஜி பாபுவைக் கல்லூரித் தலைமை அதிகாரி இன்னும் சஸ்பென்ஷனில் வைத்திருக்கிறாராம். இது என்ன தர்பாரோ தெரியவில்லை.

### கபுர்த்தலா ராஜா.

நமது சக்கரவர்த்தியார் இங்கு வந்துபோன ஞாபகத்திற்காக; இந்த ராஜா தமது நாட்டில் 3 பிரதான பட்டணங்களில், புதுக் கல்லூரிகள் ஸ்தாபித்திருக்கிறார். அன்றியும் பிரதமக்கல்வி எல்லோருக்கும் இனமாகவும் அளித்திருக்கிறார்.

### பினாங்கில் பிரசங்கம்,

நகரத்தாரது கோயில் வீட்டில் நாளது விரோதிகிருதுவருஷ தைமீ 13உ தொடங்கி யாழ்ப்பாணம் இந்து காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதராகிய ஸ்ரீமான் ஆ. மு. சோமஸ்கந்த பிள்ளையவர்களால் திருத்தொண்டர் பெரிய புராணம் பிரசங்கம் நன்கு நடைபெற்று வருகிறது. சர்வ மங்களத்தோடு முடியுமாறு இறைவன் திருவருள் புரிவாராக.

### நெல்லைமாணவர் தமிழ்ச்சங்கம்.

இச்சங்கம் 24-3-1912 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணி முதல் 8-30 மணி வரை நடைபெற்றது. பிரகடனம் மூலமாய் அறிவித்திருந்த அக்கிராசனாதிபதி வக்கீல் பிரமஸ்ரீ T. R. கணபதி ராம அய்யரவர்கள் B. A., B. L. அசௌகரியத்தினிமித்தம் வரக்கூடவில்லையானபடியால் அங்கு விஜயஞ் செய்திருந்த, இந்துக்காலேஜ், தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் T. R. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் அக்கிராசனம் வகித்தார்கள். அவ்வமயம் பிரமஸ்ரீ சேதுமாதவராவ் அவர்கள் "மாதர்பால் நங்கடமை" என்னும் பெரிய வியாசத்தை வாசித்தார்கள். வருங்கூட்டத்தில் கழக மாந்தரில் ஒருவராகிய ஸ்ரீமான் கோ. தரும கிருஷ்ண நாயுடு அவர்கள் "தந்தை தாய்ப்பேண்" என்றதைப்பற்றி வியாசம் வாசிப்பார்களென்று அறிவிக்கப்பட்டது. சபா நாயகர் முதலியோர்க்கு வந்தனமளித்து, இறைவர் வாழ்த்துடன் சபை கலைந்தது.

### லார்டு கார்மிகேல்.

சென்னைக் கவர்னராயிருக்கும், லார்டு கார்மிகேல், தாம் வந்து உத்தியோகம் பூண்ட காலம், அதிகமில்லாதிருந்தாலும், அதற்குள் ஒவ்வொரு பிரஜையின் மனதைக்காந்தம் இரும்பைக் கவர்ந்ததுபோல் கவர்ந்துவிட்டார். கவர்னர் என்ற பதத்திற்குத் தமிழில், கவருந்தன்மையுடையவர் என்று பொருள்கொள்ளலாம். (மகிழ்வடைபவருக்கு மகிழ்நர் என்பதுபோல்). ஆகவே இவரே உண்மையான கவர்னரென்பதற்கு அவர் செய்துவந்த பற்பல காரியங்களே சாக்ஷி பகரும். தயாளமும், பிரஜைகளிடத்து அத்யந்த பிரீதியுமுடைய இவர் 25-3-12ல் சென்னை கிறிஸ்தவக் கல்லூரியில் நடந்த செங்கற்பட்டு ஜில்லா ஐக்கிய நாணயச் சங்கத்தின் நான்காவது கூட்டத்தில் சபா நாயகராய் அமர்ந்து, எல்லோராலும் உபசரிக்கப்பட்டனர். தம் முடிவுரையில், சபையாரைப் பார்த்துத் தமிழில் நன்குபேச அசக்தராயிருப்பதினால், 'சரியானாலும், பிசகானாலும் அங்கீகரிக்க வேண்டும்' என்று சொல்லிப் 'போய் வாரேன் சுகமாயிரு' என்ற மங்கள வாக்கைத் தமிழிலேயே சொல்லி முடித்தனர். என்ன அருமை! என்ன அன்பு! இச்சுகுணசாகரக் குன்றத்தை, 29-3-12 முதல் நாம் பிரியப்போகிறோமே!

## பெரிய ரொட்டிகள்.

5 அல்லது 6 அடி நீளமுள்ள ரொட்டிகள், பிரான்ஸு இத்தாலியா முதலிய தேசங்களில் செய்யப்படுகின்றனவாம்.

## நவீன சப்பாத்து.

நீர்மேல் நடப்பதற்கு ஜெர்மெனியரொருவர், ஓர் நூதன சப்பாத்து கண்டு பிடித்திருக்கிறார்.

## விக்டோரியா மகா ராணியார்.

இவர், மகுடாபிஷேகத்தன்று, சகல சடங்குகளும் நிறைவேறினதும், தாம் சாதாரண உடுப்பை உடுத்திக்கொண்டு வேட்டைகாரயோடு விளையாடப்போய்விட்டனராம்.

## சீனாவின் ஜனத்தொகை.

இந்தியாவில் இவ்வருஷமிருக்கும் ஜனத்தொகைக்கு மூன்று லக்ஷம் குறைந்ததே சீனாவின் ஜனத்தொகை யென்று ஓர் அமெரிக்கப் பத்திரிகை கூறுகிறது.

## சுரங்க விபத்து.

ஜப்பானில், யோகஹாமாநகரத்துச் சுரங்கத்திலுண்டான விபத்தால் 81 பேர் இறந்துவிட்டனர். 26 பேர் விடுவிக்கப்பட்டனர்.

## ஸ்ரீமான் ராமமூர்த்தி நாயுடு.

நவீன இந்திய பீமசேனராகிய இவர், திருச்சினாப்பள்ளியை விட்டு, மதுரைக்கு வந்து தமது பராக்கிரமத்தைக் காட்டி ஜனங்களை மகிழ்விக்கிறார்.

## தமது புது கவர்னரின் மனைவியார்.

இந்த ராஜதானிக்கு வரப்போகும் கவர்னரான லார்டு பென்ட்லெண்டின் மனைவியார், இவருக்கு வாழ்க்கைப்படுமுன் சில்ரன் மகசைன் என்ற பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்தனராம்,

## விநோத விருந்து.

டாடன்ஹாம் கோர்ட்டிலுள்ள ஒரு விடுதியில், ஒரு சபையார் விருந்து நடக்குமிடங்களைத் தோட்டம், வாயம், முதலியவைகளைப் போலச் சிங்காரித்து வைத்துக்கொண்டு தாங்களும் பறவை, நாய், புலி, சிங்கம் முதலியவைகளைப் போல் வேஷம் போட்டுக்கொண்டு, உண்டார்களாம். பரிமாறுபவர் பூனைவேஷம் போட்டிருந்தார்களாம்.

## ஓர் பெண்மணிப் பேரால் ஆஸ்பத்திரி.

தென்னாற்காடு ஜில்லா வளவனூரில், புதுச்சேரியிலிருந்த சி. கிருஷ்ணசாமி செட்டியாரின் மனைவியார், அப்ரஞ்சியம்மாள் 5 ஆயிர ரூபாய் உதவியிருக்கின்றார்களாம். இவரன்றோ சற்குணி.

## உயர்குடிக்குற்ற குணம்.

தஞ்சாவூர் ஜில்லாக் கலெக்டராயிருக்கும் மிஸ்டர் ராய் அவர்களின் மனைவியார் சந்தைக்குத்தாமே போய்க்காய்கறிகள் வாங்கிச் சென்றார்களாம். நவரத்தினத்திற்குரிய மதிப்பு என்றுங் குறையாதன்றே. இவர்கள் பங்காள தேசத்தவர். கூழாங் கற்கள்தான் பெருமையாற் கூத்தாடும்.

## ஜப்பான் கப்பல்கள்.

இந்தியாவுக்கு ஜப்பானிலிருந்து கப்பல்கள் வந்து, பிரிடிஷ் இந்திய ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனியாருக்குப் போட்டியாக ஏற்றுமதி செய்வதில், முற்பட்டிருக்கின்றன. பழைய கம்பெனியாருக்கு அச்சமுண்டாயிருக்கிறது.

## நீதிபதியைக் கொன்றார்கள்,

அமெரிக்க ஐக்கிய மாகாணத்தில், ஹில்ஸ்வில் லா என்ற கோர்ட்டில் குற்றவாளிக்குத் தண்டனை விதித்த நீதிபதியைக் குற்றவாளியின் சகோதரர் சுட்டுக்கொன்றுவிட்டனராம். அதன்மேல் பெருங் கலகமும் விளைந்ததாம்.

## நகரத்தார் கூட்டம்-

X மெம்பர்களை நியமிக்கும்படியாக நேமங் கோவிலார் கூடினபோது, 75 பேர் பாதரக்குடிச் சுவாமிகளுக்குச் சார்பாக இருப்பதாகத் தெரிந்தமையால், மெம்பர்கள் தெரிந்தெடுக்கப்படாமல் கூட்டங் கலைந்துவிட்டது.

## இந்திய தளகர்த்தர்.

அமெரிக்கா ஐக்கிய மாகாணத்தில் சத்தியேந்திரநாத் சட்டர்ஜி என்னுமொரு இந்தியர், லெப்டினென்ட் உத்தியோகம் பெற்றுச் சேனையிலிருக்கிறார் இந்தியாவுக்கு இது எவ்வளவு கௌரவம் பார்த்தீர்களா?

## மலேயாவில் இந்தியர்.

இந்நாட்டில், ஜனத்தொகையில் இரண்டாவதாயிருப்பது, இந்தியர்களே (தமிழர்). இப்படிக் குடியேறியிருக்கும் தமிழர்களில், பறைச்சாதி நீங்கலாக, மற்ற ஜாதியாருக்குள், பெண் கொள்ளல், கொடுத்தல் முதலியன நடந்து, பரஸ்பரம் எல்லோரும் ஒரே ஜாதியாய் வாழுகின்றனர்.

## சீதோஷ்ணந் தெரிவிக்குங் கருவி.

ஜுரமடிப்பவர்களைப் பரிசோதிக்கும் போது ஆங்கில வைத்தியர்கள் உபயோகப்படுத்துங் கருவியை நேயர்கள் பார்த்திருக்கலாம். உலகத்திலெல்லாம் பெரிய கருவியொன்று அமெரிக்காவில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. அது 20 அடி உயரமும் 100 அடி தூரத்திலிருந்து பார்த்தால் தெளிவாய்த் தெரியக்கூடிய பெரிய எழுத்துக்களையுமுடையதாயிருக்கிறது, இக்கருவி குளிர்ச்சியை 35 டிக்கிரி வரையிலும் உஷ்ணத்தை 115 டிக்கிரி வரையிலுங் காட்டுமாம்.

## பர்மாவில் உலோகப் பொருள்.

மிச்சினா ஜில்லாவைச் சேர்ந்த கமெய்ங் வட்டகையில்: பெட்ரோலியம், தங்கம், இரிடியம், பலாடிய முதலிய உலோகப் பொருள்கள் அபரிமிதமா யிருக்கின்றனவென்று கண்டுபிடித்திருக்கிறார்கள். ருஷியாவின் பெட்ரோலியப்பொருள் இப்போது அதிகமாகச் செலவாகி வருவதால், விலை அதிகரித்துவிட்டது. அந்நிய தேசங்களும், கேட்ட விலையைக் கொடுத்துக்கொண்டே வருகின்றன. தவிரவும், இந்தியாவுக்கும், பர்மாவுக்கும், இருப்புப்பாதை போடும் வழி இந்தப் பக்கமாகப் போட்டால், 649 லட்சமும், 900 லட்சமும், செலவாமற் 383 லட்சத்தோடு முடிவாகுமென்றும் இந்தியா பர்மா ஆகிய இருதேசங்களுக்கும் நல்ல அதிர்ஷ்டமுண்டாகுமென்றும் கருதப்படுகிறது.

## நெல்லை மாணவர் தமிழ்ச்சங்கம்

### பள்ளிக்கூடங்களில் மதபோதம் அவசியமா?

[முற்றொடர்ச்சி.]

கல்வி யெனப் பொதுப்படக் கூறினும் உலக நூற்கல்வி, சமய நூற்கல்வி என்ற இருவகைக் கல்வியும் அதனுள் அடங்கும். ஆகலின் கல்வி, சமயம் இவ்விரண்டின் கூட்டுறவினாலேயே இவ்வுலகிலும் பிறிதோர் உலகுண்டெனில் இன்பப் பெரு வாழ்வையடைய முடியும். இதுபற்றியும் மாணவர்க்குச் சமய போதனை அவசியமே.

இனிக் கோவில்கட்குச் சென்று விக்கிரகங்களை வணங்குதலிலாவது, பிரார்த்தனைகள் செய்வதிலாவது, அனுஷ்டானங்களைச் செய்வதிலாவது பயன் உளதோ வெனின், பயன் உளது. மக்கள் மனம் முன் உருவத்தையே நாடிப் பின் அருவத்தை நாடும். மணலில் எழுதி யன்றே காகிதத்தில் எழுதுகின்றோம். அதன் பின்னர் தான் மனக் கடிதத்தில் எழுத ஆரம்பிக்கின்றோம். ஆகலின் விக்கிரகங்களைப் பூசித்தலினாலும் பயன் உண்டு. உண்மைப் பக்தன் கண்கட்கு விக்கிரகங்கள் விக்கிரகங்களாய்த் தோன்றா. அன்பே உருவெடுத்து வந்ததாய்க் கொள்வான். கண்ணீர் மல்கி அருள் சுரந்து ஆனந்தமடைவான். தனிச் சிவலிங்கத்தைக் கல்லென மதியாது கடவுளே யென மதித்தார் நங் கண்ணப்ப வள்ளல். மதித்து அன்பு விரதம் பூண்டு வீடு அடைந்தார். அவர்தம் அன்பை அளவிட்டறிந்தார் யாவர். நக்கீரர் முதலிய பேரன்பர்களே அளவிடமுடியாததை யானோ அளவிட்டறியவல்லேன். அன்பன்றே அன்பை யறியும். கடவுள் அன்புருவர். ஆகலின் அவரே கண்ணப்பரின் பேரன்பை அறிந்து முத்தி ஈந்தருளினார். இது நிற்க, கடவுளினிடத்துப் பிரார்த்தனைகள் செய்தாலும் பயன் உண்டு. புண்பட்ட நெஞ்சினன் தன்னிடத்திலேயேயாவது அல்லது நண்பனிடத்திலாவது வாய்விட்டழுது தன் துன்பங்களை வெளியிட்ட பொழுதே மன ஆறுதல் அடைதல் யாவரும் அறிந்த விடயம். சிற்றறிவினர்பால் வெளியிடுவதால் பயனுண்டெனின் நம் குறைகளை யெல்லாம் வல்ல இன்புருக் கொண்ட எம்பெருமானிடத்துக் கூறி அன்பு செலுத்துவமேல் நமக்கு யாது குறைதான் நேரிடும். "பெரியாரைத் துணைகொள்" என்றாள் ஔவையும்.

"நல்லாரைக் காண்பதுவும் நன்றே, நலமிக்க நல்லார் சொற் கேட்பதுவு நன்றே—நல்லார் குணங்களுரைப்பதுவு நன்றே யவரோ டிணங்கி யிருப்பதுவும் நன்று."

ஆதலால் கடவுள் மாட்டு அன்பினராய பெரியோர்கள் தம் திவ்விய சரிதைகளைக் கற்று அறிவதினால் பெரும் பயன் உண்டு. அவர்தம் நன்மார்க்கத்தைப் பின் பற்றி நடந்தால் கடவுள் அருளும் அன்புஞ் சுரப்பர்.

பெரியோரைப்பற்றி யன்றோ சுழல்கின்றது இவ்வையக முழுதும். ஏசுநாதர் தம் வாழ்க்கைச் சரிதையை உணருமாறு உணர்வோர்க்கு முக்திவழி கைகூடுமென்பதில் யாதொரு ஐயமுமின்று. அவர் இவ்வுலகில் அறிவுச்சுடர் கொழுத்தி அன்பு பூணுங்கள் என்று கூறிய ஒன்றுமே போதுமானது. நம் தெய்வத் திருத்தொண்டர் புராணம் படிப்போர் இன்பமேயடைவர். சம்பந்தச் செம்மல் தம் அறிவையும், சுந்தரக்குரிசில் தம் தீம் பாடல்களையும், நாவுக்கரையர் தம் நல்லன்பையும், வாதவூரர் தம் அருள்வாக்கினையும் வியவாதார் யாவர்? வியந்துருகாதார் யாவர்? உருகி யன்புருவாகாதார் யாவர்? சேக்கிழார் தம் செஞ்சொல்லமுதம் பருகவே அன்பும் இன்பமும் மயிர்க்கால் தோறும் ஊறப் பெருகுமென்பதை யாவரே மறுப்பர்?

[தொடரும்.]



315

## பகுத்தறிவு:

பகுத்தறிவென்பது விதி விலக்குகளை யுணரச்செய்யும் அறிவுக்குப் பெயராகும். மனிதன் ஏனைய ஜீவராசிகளினும் மேம்பட்டவனெனப் பெருமையுற்றது பகுத்தறிவினாற்றான். மனிதன் நீங்கலாக ஏனைய ஜீவராசிகளுக்குள்ளே அந்தந்தப் பிராணிகள் தத்தம் இனத்தின் பொது லட்சணமாயிருக்கும் இயற்கையறிவிற்கேற்றபடி கருமங்களைச் செய்து வருகின்றன. மனிதனோ தன்னுடைய பகுத்தறிவிற் கேற்றபடி காரியங்களை நிர்வகித்து வருகின்றான். அவரவர்களின் பகுத்தறிவியக்கத்திற்கேற்றவாறு அபிப்பிராயங்களும் அமைகின்றன. பகுத்தறிவியக்கத்தை அதிகமாயடையப் பெறாதவர்கள் பெரும்பாலும் நாகரீகமற்றவரென்று இகழப்படுவார்கள். அவர்கள் செய்கைகள் யாவும் வெகுவாய் விலங்கு புள் இவற்றைப்போல் தாங்கள் சேர்ந்திருக்கும் இனத்தின் செய்கைகளாயிருக்கும். மனிதனுடைய பகுத்தறிவினியக்கம் அவன் சார்ந்திருக்கும் இனத்திற்கேற்றபடி யிருக்கிறதென்றும் அவனுக்கு இயற்கையில் பகுத்தறிவென்பது கிடையாதென்றும் சில மனோதத்துவ சாஸ்திரிகள் சாதிக்கிறார்கள். அவர்கள் அங்ஙனம் கூறுவது மோக்ஷவீடடைதற்குரிய மெய்யறிவென்பதைத்தான். ஆயின் பகுத்தறிவு வேறு, மெய்யறிவு வேறென்னில், சர்தாரணமான விஷயங்களைப் பாகுபாடுசெய்துணர்வது பகுத்தறிவென்றும், உண்மையான ஆன்ம நிலைமையைப் பொய்யின்றி யுணர்வது மெய்யறிவென்றும் கூறுவதவர்களியல்பு. "இதனை ஐயறிவரிந்தவை யடங்கின வரோனு மெய்யறிவிலாதவர்க்கு வீடது பெறாரே" என்னும் ஆன்றோர் வாக்கானுங் காணலாம். ஆதலால், அவர்களுரைப்பதும் முற்றும் பொருத்தமற்றதென் றுரைக்கலாகாது. மனிதனுடைய இயற்கையறிவு வெகுவாய் இனத்திற்கேற்றபடி திருந்துவதாயிருக்கிறதென்பது மாத்திரம் வாஸ்தவமே. இது காரணம் பற்றியே சீர்படவேண்டிய ஒவ்வொருவரும் சாது சங்கத்தைச் சாரவேண்டுமென்றும் நல்லாரோடிணங்கவேண்டுமென்றும் தீயார் சார்பைத் திரஸ்காரம் பண்ணவேண்டுமென்றும் ஆன்றோர் பலருங் கூறியுள்ளார். பகுத்தறிவு பழக்கத்திற்கேற்றபடி திருந்துகிற காரணத்தினாலேயே அத்தகைய அறிவு இயற்கையில் மனிதனிடத்திலில்லையென்று சாதிப்பது யுக்தி வாதத்தில்நிலைக்காது. ஏனெனில் "இணக்கமறிந்திணங்கு" முதலிய நீதி வசனங்களை யூகித்தறியுமிடத்து மனிதனிடத்தில் இயற்கையிற் பகுத்தறிவுமையாதிருக்கின் ஆன்றோர்கள் "அறிந்திணங்கு" என்பது முதலிய கட்டளைகளை யிட்டிரார்களே. ஆகையால் ஆன்றோர்கட்கு மனிதனிடத்திற் பகுத்தறிவு இயற்கையிலுண்டென்பதே கொள்கையெனல் வெள்ளிடைமலைபோல விளங்குகின்றது. அன்றியும் இப்பூவுலகில் ஒவ்வொருவனும் தான் தான் புரியும் சகல கருமங்கட்கும்கடவுளுடைய சந்நிதானத்தில் உத்தரம் சொல்லவேண்டியவனாயிருக்கிறானென்றும், அவ்வொவ்வொருவனும்இவ்வுலகத்திற் புரியும் நற்காரியங்களுக்காக ஆண்டவனிடத்திலிருந்து ஓர்வகைப் பரிசு பெறுகிறானென்றும், சர்வ மதவாதிகளும் சம்மதித்துக் கூறுவர். இதனாலும் இயற்கையிற்றானே மனிதனுக்கு நன்மை தீமைகளைப் பாகுபாடு செய்துணரும் பகுத்தறிவைக் கடவுள் படைத்திருக்கிறானென்பதிற் சந்தேகமில்லை. இவ்வாறு அவர் படைத்திராவிட்டால் நன்மைக்காகப் பரிசளிப்பதும் தீமைக்காகத் தண்டிப்பதும் அவர் பட்சத்தில் நீதியற்றதாய் முடியும். ஆயின் அவ்வாறான பகுத்தறிவமையப்பெற்ற மானிடர் யாவரும் நன்மை தீமைகளை நன்றாயுணர்ந்து தீய மார்க்கத்தை யொழித்துச் சன்மார்க்கர்களாகின்றார்களா? வென்னில், இப்போது இத்தனை நிமிஷம் இவ்வளவு பணி என்று ஓரிம்மியளவும் பேதப்படுத்தாது தன்னையுடையவர்கள் கவனியாதிருக்கினும் அழைத்துச் சொல்லுவதுபோல் அப்போதைக்கப்போது அடித்துக்காட்டுகின்ற கடிகாரங்கள் எல்லோரிடத்திலுமிருக்கினும் அதற்குச் சாவிகொடுக்கவேண்டிய நாட்கணக்கின்படி தவறாது சாவிகொடுத்துக் கொண்டும் சாமான்களைத் துடைக்க வேண்டிய நாட் கணக்கின்படி துடைத்துக்கொண்டும் காப்பாற்றி வருபவர்களுக்கு அக்கடிகாரங்கள் உதவியாவது போல் மேற்கூறிய காரியங்களைச் சற்றும் கவனியாதவர்கட்கு அக்கடிகாரங்கள் உதவுமா? அப்படியே தத்தமக்கு வாய்த்துள்ள பகுத்தறிவென்னும் வாளைச் சாத்திரவிசாரணை சாது சங்கச் சார்பு என்னும் சாணையில் அப்போதைக்கப்போது தீட்டிவந்தால், நாம் சம்சாரமென்னும் காட்டில் காம குரோத லோப மோஹ மதமாச்சரியமென்னும் மிருகங்களைநேர்ந்தபோது அவ்வவைகளைத் தக்கபடி தண்டித்து, வெற்றி பெற்று நிர்ப்பயமாயுலாவி அக்குடும்பாரண்யானுபவங்களைக் குறைவறக் கைக்கொண்டு குதுகலிக்கலாம். அவ்வாறின்றி, அவ்வாளைத் துருப்பிடிக்கச்செய்து வைத்துக்கொண்டிருந்தால், குடும்பாரண்யத்திலுலாவுதல் கூடாது. ஆரண்யத்திலுலாவவே அசாத்தியமானபோது அவ்விடத்திற்றானே நிலையாயிருந்து தவம்புரிய நேருமா? நேராது, ஆகவே "இல்லறத்தானல்லேனியற்கைத் துறவியல்லேன்" என்று சொன்னபடி இரண்டுங்கெட்டவனாய் உபய பிரஷ்டன் என்னும் பட்டம் சூடிக்கொள்வோம். ஆகையால் நாம் ஒவ்வொருவரும் நமக்கு வாய்த்துள்ள பகுத்தறிவை அதிக ஜாக்கிரதையுடனே வெகு விரைவில் மேற்சொல்லிய சாணைகளிற்றீட்டிக் கூர்மையுண்டாக்கி வைத்திருக்கவேண்டுமென்பதை உறுதியான வேத வசனமாகக்கடைப்பிடிக்கவேண்டும்.

Sri Ramabhadhara Sarma.

---



---


## சந்தா விவரம்.

வருடம் 1க்கு (தபால்கூலியுடன்) ரூ 4—0—0

மாதம் 6க்கு ,, 2—4—0

தனிப்புதுப்பிரதி 0—1—6

தனிப்பழையபிரதி 0—2—0

பினங், சிங்கப்பூர், நேட்டால் முதலான வெளியூர்களுக்கு வருடம் 1க்கு (தபால் கூலியுடன்) ரூ 5—0—0

மாதம் 6க்கு மேற்படி 2—12—0

சைகோன்முதலிய அந்நிய நாட்டுக்கு ... 7—0—0

## விளம்பர விகிதம்.

ஒரு பத்திக்கு மீ 1க்கு ரூ 20—0—0

அரைப்பத்திக்கு ,, 10—0—0

கால்பத்திக்கு ,, 5—0—0

சில்லரை விளம்பரத்திற்கு வரி 1க்கு 0—4—0

நீடித்த காலம் விளம்பரஞ் செய்பவர்களுக்கு மேற்படி விகிதத்தில் சகாயஞ் செய்யப்படும்.

மானேஜர்,

வைசியமித்திரன் ஆபீஸ்,

பல கண்காக்ஷிகளில்
மெடல்கள் பெற்ற அபூர்வ ஔஷதங்கள்.

## பி: சுப்பராயின், ஆயுர்வேத ஔஷதங்கள்.

24. இரக்ஷாமிருதம்:— தாவர வர்க்கத்தைச்சார்ந்த அநேக அபூர்வ மூலிகைகளால் செய்யப்பட்ட இச்சூர்ணம் காபி தேயிலைக்குப் பதிலாக உபயோகப்படுத்துவதற்காகவே தயார் செய்யப்பட்டிருக்கிறது. காபி தேலைக்குள்ள துர்க்குணங்களிதற்கில்லை. காபிப்பொடியை எவ்விதம் உபயோகிக்கிறோமோ அவ்விதமாகவே இதையும் உபயோகிக்க மிக்வும் ருசியான பானமாகும். அநேக் குழந்தை முதல் விருத்தாப்பியர்கள் வரையில் எல்லோரும் உபயோகிக்கலாம். சுரம், ஜன்னி, கர்ப்பம், பிரசவம், காலறு முதலிய காலங்களில் மேற்படி சூரணத்தின் கஷாயத்தை பாலுடன் அல்லது பாலைச்சேர்க்காமல், சமயத்திற்குத் தக்கபடி உபயோகிக்க, ஜனங்களை நோய்களிலிருந்து குணப்படுத்துவதுமன்னியில் நோய் வாராமல் காக்கும். பித்தவாயு, காசம், க்ஷயம், அஜீர்ணம், மலச்சிக்கல், தலைவலி முதலியவைகளைப் போக்கும். இரத்தத்தை சுத்திசெய்து தாதுவிர்த்தியையும், தேக ஆரோக்கியத்தையும், தரும். அக்கினி மாந்தமுள்ளவர்களுக்கும், மதுமூத்திர ரோகிகளின் நீரிலுள்ள தித்திப்பையும், நீரின் அளவையும், குறைத்து மூத்திரரோகத்தை அடியோடு குணமாக்கும். தேகத்தின் உஷ்ணத்தைச் சாந்தி செய்யும். மூளையைப் பலப்படுத்தி, ஞாபகசக்தியை அதிகப்படுத்தும். மாணக்கர்கள், வக்கீல்கள், உத்தியோகஸ்தர்கள், பகைக்கத்தக்க துணமுள்ள காபி, தேயிலையை விட்டுவிட்டு, இதை உபயோகிக்க அருமையான சூர்ணம். டப்பா 1-க்கு விலை அணா 6, வி பி சிலவு அணா 3 பிரத்தியேகமாகும்.

25. சர்பத்துகள்:— திராக்ஷைப் பழம், நன்னாரிவேர், ரோஜாப்புஷ்பம், வாழைப்பழம், எலுமிச்சப்பழம், மாதளைப்பழம், கிச்சிலிப்பழம், பாதம், அன்னாசிப்பழம், நாருஞ்சிப்பழம், கொய்யாப்பழம், சீமை இலந்தைப் பழம், இஞ்சி சர்பத்துகள். மேற்படி சர்பத்துகள் பழவகைகளின் சத்துக்களால் செய்யப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றையும் துளிகள் கணக்காகவே உபயோகிக்க வேண்டும். ஒரு சேர் குளிர்ந்த ஜலத்திலாவது, சோடாவாடரிலாவது, சுமார் 5 துளிகள் சேர்த்தால் மிகவும் இனிப்பாகவும், எந்தப்பழசர்பத்து உபயோகிக்கப்பட்டதோ, அந்தப்பழத்தின் மதுரமான வாசனையோடுங்கூடிய சர்பத்தாகும். அரை அவுன்சு சிசாக்களில் விற்கப்படும். இச்சிறு சிசாவிலுள்ள சர்பத்து 50 சேர் குளிர்ந்த ஜலத்துடனாவது சோடா வாடரோடாவது சேர்த்தால் 50 சேர் உசிதமான சர்பத்தாகும். அரை அவுன்சுள்ள சிசா 1க்கு விலை அணா 8, வி பி சிலவுகள் 1 முதல் 3 சிசாக்கள் வரையில் அணா 5 பிரத்தியேகம்.

பி. சுப்பராய்
பரங்கிப்பேட்டை,
தென்னார்க்காடு ஜில்லா.

*My Address*
**P. SUBBAROY,**
PORTO-NOVO
*South Arcot District.*

# பட்டு பீதாம்பரக்கம்பெனி காசி.

காட்லாக் இனாம். காட்லாக் இனாம்.

நகரத்தார்களில் தக்க முதலாளிகளுக்கு வி. பி. இல்லாமல் சரக்குகள் அனுப்புவோம்.

☞ நமது வைசியமித்திரன் பத்திரிகைக்கும் நகரத்தார்களின் வித்தியா தர்மத்துக்கும், கமிஷன் தருமமாகக்கொடுக்கப்படும்.

காசிபட்டு பீதாம்பரங்கள்,

திருப்தியில்லாதவைகளைத் திருப்பப்பெற்றுக்கொள்வோம்.

விலை ஜாப்தா புஸ்தகம் இனாமாக அனுப்பப்படும்.

பர்மா லுங்கிகள்.—பர்மா தேசத்துப் பெண்கள்கட்டிக்கொள்வது.

(1). 4 அல்லது 4½ முழ நீளம் 2½ முழம் அகலம் விளிப்பும் மத்தியில் உள்ள பட்டியும் ஜரிகையுள்ளது. உடல் சாதா உருப்படிஒன்றுக்கு ரூ 9 முதல் 15 வரை.

(2) மேற்படி மாதிரி உடலிலும் ஜரிகை பூக்கள் புட்டாக்கள் போட்டது. உருப்படி ஒன்றுக்கு ரூ 10 முதல் 30 வரை.

(3) மேற்படி நீளம் அகல ஜரிகையில்லாத ருத்திராக்ஷக்கரை போட்டது உருப்படி ஒன்றுக்கு ரூ 5 முதல் 10 வரை.

குறிப்பு:—மேற்படி லுங்கிகள் எல்லா நிறத்திலும் அனுப்பலாம். வேறு எந்த மாதிரி புது டிசைன் ஆர்டர்கொடுத்தால் தயார் செய்து அனுப்பலாம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்குத் தலைப்பட்டு.

(1) 6 முழம் நீளம் 2 அல்லது 2½ முழம் அகலம் சுத்தமான வெண்பட்டு விளிம்புக் கரைகளில் ஜரிகையும் சிவப்பு பட்டு நூலும் கலந்து வேலை செய்தது. முந்தியில் 5 இஞ்சு அகலம் ஜரிகைக்கரையுள்ளது. உருப்படி ஒன்றுக்கு ரூ 30, 35, 40, 50 வரை.

கெண்டைப்பட்டு.

(2) 7 முழம் நீளம் 2½ முழம் அகலம் விளிம்பு முந்தி ஜரிகை வேலைகள் மூலைகளில் பாம்பிஞ்சு. சிவப்பு நிறம் உருப்படி ஒன்றுக்கு 20 முதல் 30 வரை.

பெண்பிள்ளைகள் கட்டிக்கொள்ளும் புடவை.

(3) 10 அல்லது 11 அல்லது 12 முழம் நீளம் 2½ முழம் அகலம் விளிம்பு முந்தி ஜரிகை வேலைகள் மூலையில் பாம்பிஞ்சு சிவப்பு நிறம். உடல் சாதா புடவை ஒன்றுக்கு ரூ 20 முதல் 25, 30, 35, 40, 50, 100 வரை.

(4) மேற்படி புடவை புட்டா போட்டது. விலை ரூ 25 முதல் 30, 35, 40, 50 100 வரை.—எல்லா நிறத்திலும் புடவைகள் அனுப்பலாம்.

வெண்பட்டு வேஷ்டிகள்.

சுத்தமான வெண்பட்டு வேஷ்டிகள், கோயமுத்தூர் வேஷ்டிகள் மாதிரி சன்ன கம்பி, ருத்திராக்ஷ கம்பி ஜரிகை கம்பி போட்டவை.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 6 முழம் | 2½ அகலம் | ரூ 7 முதல் 9 வரை | | | 8 முழம் | 3 அகலம் | ரூ 12 முதல் 18 வரை | |
| 7 ,, | 3 ,, | 10 ,, 12 ,, | | | 9 ,, | 3 ,, | 14 ,, 20 ,, | |
| 6 ,, | 2½ ,, | 8 ,, 12 ,, | | | 10 ,, | 3 ,, | 15 ,, 22 ,, | |
| 7 ,, | 3 ,, | 10 ,, 14 ,, | | | | | | |

மற்றுமுள்ள சகல பட்டு பீதாம்பர சேலைகளும் துப்பட்டா முதலியவைகளும் அனுப்பப்படும்.

குழந்தைகள்.

குழந்தைகள் விளையாடக்கூடிய பித்தளை, வெங்கலத்தால் செய்த செம்பு, குடம், காண்டி முதல் 30 சாமான்கள் அடங்கிய அழகும் சேர்த்தியும் நைசும் பளபளப்புமுள்ள அழகிய பாத்திரங்கள் 30 உள்ள.

சிறிய செட்டு ஒன்றுக்கு ரூ 2—0—0 | பெரிய செட்டு ஒன்றுக்கு ரூ 4—0—0

உருத்திராக்ஷங்கள் ஜெபமாலைகள் பரிசுத்தமானது.

108 உள்ளமாலை ஒன்றுக்கு 6 அணா முதல் ரூ 12 வரை. விலை அதிகப்படுவது போல் மணிகள் சிறிதாக இருக்கும். 6 முகக்கண்டி 32 உள்ளது கண்டி ஒன்றுக்கு ரூ 1 முதல் 10 வரை. 5 முகக்கண்டி 32 உள்ளது கண்டி ஒன்றுக்கு அணா 10 முதல் ரூ 10 வரை. விலை அதிகப்படுவது போல மணிகள் பெரிதாக இருக்கும்.

சம்மதமில்லாததைத் திரும்பப் பெற்றுக்கொள்ளப்படும்.

காசி வயிரவர் கயிறு,

1வது செ. பெரிய கயிறு 100க்கு ரூ 3—0—0. 2வது செ. பெரிய கயிறு 100க்கு ரூ 2—8—0. 3வது செ. பெரிய கயிறு 100க்கு ரூ 2—0—0. 4வது செ. சிறிய கயிறு 100க்கு ரூ 0-6-0. 5வது செ. சிறிய கயிறு 100க்கு ரூ 0-4-0.

விலாசம் எழுதவேண்டிய விதம்.

மானேஜருக்குக் கொடுப்பது.

பட்டு பீதாம்பரக்கம்பெனி, தாராநகர் தெரு, காசி

**SILK PITAMBER CO., BENARES CITY.**

Printed and published by S. T. Ramanathan Chettiar, at the Vyslamitran Press, Devakota.

